# உங்கள் கேள்வியும் வேதஆராய்ச்சியாளர் எம்.எஸ்.வசந்தகுமாரின் பதிலும்

**ஆதியாகமம் 1:20இன்படி ஜலத்திலிருந்து பறவைகள் உருவாக்கப்பட்டுள்ளன. ஆனால், ஆதியாகமம் 2:19இல் பறவைகள் மண்ணினால் சிருஷ்டிக்கப்பட்டுள்ளதாகக் குறிப்பிடப் பட்டுள்ளது. வேதாகமத்தில் ஏன் இப்படி ஒரு முரண்பாடு உள்ளது?**

ஆதியாகமப் புத்தகத்தின் முதலிரு அதிகாரங்களுக்கும் இடையில் இருக்கும் முரண்பாடாகப் பலரால் சுட்டிக்காட்டப்படும் முக்கியமான ஒரு விஷயம், பறவைகளின் சிருஷ்டிப்பைப் பற்றியதாகும். ஏனெனில். ஆதியாகமம் 1:20இன்படி, தேவன் பறவைகளை ஜலத்திலிருந்து சிருஷ்டித்துள்ளார். ஆனால், ஆதியாகமம் 2:19இல் அவைகளைத் தேவன் மண்ணினால் உருவாக்கியதாகக் குறிப்பிடப்படடுள்ளது. இதனால், பறவைகளின் சிருஷ்டிப்பைப்பற்றி ஆதியாகமம் முரண்பாடான தகவல்களைக் கொண்டுள்ளதாகப் பலர் கருதுகின்றனர்.

பறவைகளின் சிருஷ்டிப்பைப்பற்றிய முரண்பாடு தமிழ் வேதாகமத்திலேயே காணப்படுகின்றது. இதற்குக் காரணம் நாம் தற்பொழுது உபயோகிக்கும் தமிழ் வேதாகமத்தை மொழிபெயர்த்தவர்கள் ஆதியாகமம் 1:20இல் ஒரு வாக்கியத்தைத் தவறவிட்டுவிட்டனர்.[1] இதனாலேயே பறவைகளும் தண்ணீரிலிருந்து சிருஷ்டிக்கப்பட்டதாக இவ்வசனத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. உண்மையில், ‘‘பின்பு தேவன்: நீந்தும் ஜீவஜந்துக்களையும், பூமியின்மேல் வானம் என்கிற ஆகாயவிரிவிலே பறக்கும் பறவைகளையும், ஜலமானது திரளாய் ஜநிப்பிக்கக் கடவது என்றார்’’ என்னும் வசனத்தில், ‘‘ஜலமானது திரளாய் ஜநிப்பிக்கக்கடவது’’ என்னும் வாக்கியம், ‘‘நீந்தும் ஜீவஜந்துக்களை’’ என்பதை அடுத்து வரவேண்டும். அதாவது, ‘‘பின்பு தேவன்: நீந்தும் ஜீவஜந்துக்களை ஜலமானது திரளாய் ஜநிப்பிக்கக்கடவது’’ என்று இவ்வசனம் ஆரம்பமாகவேண்டும். இதன்படி, நீர்வாழ் உயிரினங்களைத் தேவன் ஜலத்தில் உருவாக்கி யுள்ளார் என்பதை அறிந்துகொள்கின்றோம்.

ஆதியாகமம் 1:20இன் இரண்டாவது வாக்கியத்தில், ‘‘பறவைகள் பறந்து திரியக்கடவது’’ என்னும் வாக்கியம் தமிழ் வேதாகம மொழிபெயர்ப்பாளர்களினால் தவறவிடப்பட்டுள்ளது. இவ்வாக்கியம் ‘‘பூமியின்மேல் வானம் என்கிற ஆகாயவிரிவிலே பறக்கும் பறவைகளையும்’’ என்பதைத் தொடர்ந்து வரவேண்டும். இதன்படி இவ்வாக்கியம் ‘‘பூமியின்மேல் வானம் என்கிற ஆகாய விரிவிலே பறக்கும் பறவைகள் பறந்து திரியக்கடவது’’ என்று இருக்கவேண்டும். எனவே, பறவைகள் ஜலத்தில் உருவாக்கப்பட்டன என்பது வேதாகமம் போதிக்கும் விஷயம் அல்ல.

[1] தமிழ் வேதாகமத்தின் மொழிபெயர்ப்பு பற்றிய விபரங்களுக்கு எனது *புனித வேதாகமத்தின் புதுமை வரலாறு* என்னும் நூலைப் பார்க்கவும்.

இது தமிழ் வேதாகம மொழிபெயர்ப்பாளர்களினால் ஏற்படுத்தப்பட்ட தவறான ஒரு கருத்தாகவே உள்ளது.

ஆதியாகமம் 1:20ஐ நாம் சரியான விதத்தில் மொழிபெயர்த்தால், இவ்வசனம், ''பின்பு தேவன்: நீந்தும் ஜீவஜந்துக்களை ஜலமானது திரளாய் ஜநிப்பிக்கக்கடவது, பூமியின்மேல் வானம் என்கிற ஆகாயவிரிவிலே பறக்கும் பறவைகள் பறந்து திரியக்கடவது என்றார்'' என்று இருக்கவேண்டும். தமிழ் வேதாகமத்தின் புதிய மொழிபெயர்ப்புகளில் இத்தவறு திருத்தப்பட்டுள்ளது. மோனஹன் மொழிபெயர்ப்பில் இவ்வசனம், ''திரள்திரளான ஜீவஜந்துக்கள் தண்ணீரிலே பலுகுக, பூமியின்மேல் ஆகாய மண்டலமாகிய வானத்தின் கீழே பறவைகள் பறந்து திரியக்கடவதென்று கடவுள் சொன்னார்'' என்றும், இலகு தமிழ் மொழிபெயர்ப்பில், ''அதன்பின் இறைவன் தண்ணீரில் உயிரினங்கள் பெருகட்டும். பூமிக்கு மேலாக ஆகாய வெளியெங்கும் பறவைகள் பறக்கட்டும் என்றார்'' என்றும், திருவிவிலியத்தில் ''அப்பொழுது கடவுள், திரளான உயிரினங்களைத் தண்ணீர் தோற்றுவிப்பதாக! விண்ணுலக வானத்தில் நிலத்துக்கு மேலே பறவைகள் பறப்பனவாக! என்றார்'' என்று இவ்வசனம் மூலமொழிக்கு ஏற்றவிதத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது.